பாட்டினைப்போல் ஆச்சரியம்
பாரின்மிசை இல்லையடா.[7]

என்றும்,

பூதங்க ளொத்துப் புதுமைதாம் விந்தையெனில்
நாதங்கள் சேரும் நயத்தினுக்கு நேராமோ?[8]

என்றும் பாடச் செய்கின்றது.

குரங்கன் சித்திரக் கவி புனையும் வக்கணைப் புலவருக்குக் குறியீடு; அங்ஙனமே மாடன் இலக்கணப் பொதி சுமக்கும் இலக்கணப் புலவருக்குக் குறியீடு. இவர்கள் இருவரும் கவிஞருக்கும் கவிதைக்கும் இடையில் போட்டியிடும் போலிகளாகும். தமிழ்க் கவிதை என்னும் தலைவி நீண்ட காலமாகத் தன் தலைவனை விட்டுப் பிரிந்திருந்தாள். உண்மைக் கவிஞரிடம் உயிருக்குயிராக அன்பு வைத்திருந்தாள். இலக்கணப் புலவருக்கும் கவிதைக்கும் இலக்கண வகையில் ஒருவித உறவு உண்டு யாப்பிலக்கணத்தையும் அணியிலக்கணத்தையும் பாட்டியல் நூல்களையும் வைத்துக் கொண்டு வாணிகம் நடத்துகின்றவரல்லவா? கவிதைக்கு இந்தப் புலவரிடத்தில் ஒரு தனிப் பரிவு உண்டு. 'வரகவி' அதாவது சித்திரக் கவி புனைபவர் கவிதையிடம் படாடோபத்துடன் உரிமை கொண்டாடுபவர். இவரது செருக்கில் மயங்கிக் கவிதையின் பெற்றோர் இவருக்குத் திருமணம் புரிவிக்க இசைகின்றனர். குரங்கனும் மாடனும்—சித்திரக்க கவிஞரும் இலக்கணப் புலவரும் - குயிலிடம் போலி நாடகம் நடத்துகின்றனர். உண்மைக் கவிஞர் இதனைக் கண்டு நெஞ்சம் குமுறுகின்றார்; சினம் பொங்கி எழுகின்றது. உண்மை வெளிப்பட்டு விடுகின்றது. கவிதை மங்கை கவிஞரிடம் ஐக்கியமாகி விடுகின்றாள். 'குயில்பாட்டு' என்ற அற்புதக் கதைக் காவியம் பிறந்து விடுகின்றது.

---

7. கு. பா: குயிலும்மாடும் - அடி 96
8. ஷை. ஷை அடி (97-98)

இத்தகைய உள்ளுறைப் பொருள் கவிதையில் அமைந்திருந்தால் கவிஞர் இதை வெளிப்படையாகக் கூறாவிடினும் குறிப்பாகக் கூட ஏன் காட்டவில்லை? என்ற வினாவுக்கு விடை கிடைத்து விடுகின்றது. இதை வெளிப்படையாகக் கூறினால் கவிஞரின் தற்பெருமை விளம்பரம் ஆகிவிடும்; காவியத்தின் சுவையும் குன்றிவிடும். கற்பனைக்கு அடிப்படையாக இருந்த கருத்தைச் சொல்ல வேண்டும் என்று கவிஞருக்கு ஆசைதான். ஆனால் சொல்லுவதில் ஒருவித கூச்சம். இஃது உண்மையாக இருந்தால் குயில்பாட்டின் இறுதி மூன்று அடிகளின் குறிப்பு தெளிவாகின்றது. இதற்குச் சான்றாகப் பாரதியின் வாக்கிலேயே ஏதாவது சான்று தென்படுகின்றதா? என்று பார்ப்போம்.

*வாராய்! கவிதையாம் மணிப் பெயர் காதலி;*
*பன்னாள் பன்மதி ஆண்டுபல கழிந்தன,*
*நின்னருள் வதனம்நான் நேருறக் கண்டே*
*அந்தநாள் நீயெனை அடிமையாக் கொள,யாம்*
*மானிடர் குழாத்தின் மறைவுறத் தனியிருந்து*
*எண்ணிலா இன்பத்து இருங்கடல் திளைத்தோம்;*
*கலந்துயாம் மொழியிடைக் களித்தவந் நாட்களில்*
*பூம்பொழிற் குயில்களின் இன்குரல் போன்ற*
*தீங்குரல் உடைத்தோர் புள்ளினைத் தெரிந்திலேன்;*
*மலரினத்து உன்றன் வாள்விழி ஒப்ப*
*நிலவிய தொன்றினை நேர்ந்திலேன்; குளிர்புனற்*
*சுனைகளில் உன்மணிச் சொற்கள்போல் தண்ணிய*
*நீருடைத் தறிகிலேன்; நின்னொடு தமியனாய்*
*நீயே உயிரெனத் தெய்வமும் நீயென*
*நின்னையே பேணி நெடுநாள் போக்கினேன்*[9]

---

9. த. பா: கவிதைக் காதலி. (ஒரு பதிப்பில் இது கவிதா தேவி அருள் 'வேண்டல்' என்ற தலைப்பின் கீழ் உள்ளது)

பாரதியைச் சோலையில் கவர்ந்தவை இன்னவை என்பதை இப் பாடற்பகுதியில் காணலாம். கவிதையைப் பெண்ணாக வும், காதலியாகவும், குயிலினை தீங்குரல் படைத்தவளாக வும் வருணிக்கின்றார் கவிஞர். கவிதைப் பெண்ணின் வாள் விழியொத்த மலர்கள் ஏதும் இல்லை. கவிதையின் தண்ணிய சொற்கள் போல் சுனை நீர் இல்லை. ஆனால் இசை அவர் தம் மனத்தைக் கவர்கின்றது. குயிலின் தீங்குரல் அவரை ஆட்கொண்டு விடுகின்றது. எனவே, இந்தக் கற்பனைக் குயில், குயில் பாட்டுக்கு இன்றியமையாத அடிப்படையாக அமைந்து நிற்கின்றது. அற்புதமான சாகாக் 'குயில்பாட்டு' இந்த அடிப்படையில் எழுகின்றது. இந்தப் பாட்டில் பாரதி யாரின் உள்ளக் குரலினைக் கேட்கின்றோம்; உலகமே கேட் கின்றது. ஆன்மா உண்மையினையும் அழகினையும் நாடிச் செல்லும் துணிவினைப் பாட்டில் காண்கின்றேம். கவிதை கவிதைக்காகவே கனிகின்ற போக்கு இங்குத் தென்படு கின்றது. பிரச்சாரமோ, நோக்கமோ, அறிவுரையோ இங்கு இல்லை. உண்மைக் கவிதைக்குரிய இலக்கணமாக உலகத் திறனாய்வாளர்கள் இந்த உயர் பண்பினையே விரித்தோது கின்றனர்.

'விண்டுரைக்க மாட்டாத விந்தைப் பெண்ணாக-அழகிய மங்கையாக-மாறி நின்ற குயிலின் எழிலை 'எற்றே தமிழில் இசைப்பேன்?' என்று ஏங்கிக் கூறியவர் தமிழ்க் கவிஞர் பாரதியார். கற்றவர்க் கென்று அவர் கூறும் வார்த்தை இது;

...கவிதைக் கனிபிழிந்த
சாற்றினிலே பண்கூத் தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி, அதனோடே இன்னமுதைத் தான்கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதவனின் மேனி வகுந்தான் பிரமனென்பேன்[10]

---

10. கு. பா: குயிலின் முற்பிறப்பு வரலாறு-அடி-241-45

இந்தப் பாட்டில் ‘தென் பொதியை மாமுனிவர்’ தோன்று கின்றார். அவரே குயிலுக்கு அதன் முற்பிறப்பு வரலாற்றை உரைத்தவர். அதன் அன்புக் காதலனை-ஆசை நாயகனை-அடைவதை அருளியவரும் அவரே. பொதிய மலையில் வாழ்ந்த முனிவர் அகத்தியர்; ‘குறுமுனி’ என்று தமிழர்களால் புகழப் பெறுபவர். அவர் புராணமரபில் தமிழ்க் கவிதைக்கு—மரபுத் தளையில் சிக்கித் தவிக்கும் தமிழ்க் கவிதைக்கு- கழு வாய் உரைத்துச் செல்லுகின்றார். குயில் பாட்டின் உள்ளுறைப் பொருளுக்கு, குறுமுனி பிறிதொரு சான்றாக அமைந்து விடுகின்றார். இந்தக் கருத்துகளை யெல்லாம் மனத்தில் அமைத்துக் கொண்டு ஒரே மூச்சில் கவிதையைப் பல முறை படித்தால் மேலும் பல பொருத்தங்கள் துலக்க மடையும். இதனால் காவியத்தின் சிறப்பும் ஓங்கி உயர் வதற்கும் வாய்ப்புகள் நேரும்.

# குயில்பாட்டு: ஒரு மதிப்பீடு

**உள்ளடக்கம்:** 'குயில் பாட்டு' எல்லா வகையிலும் தனிப் பட்டு நிற்கும் ஓர் அற்புதக் கதைக் காவியம் இவருடைய நீண்டதொரு தனிப் பாட்டு இதுவே யாகும். இவருடைய சக்திக் கோட்பாட்டிற்குள் அடக்க முடியாத தனிக் காவியம் இது. இதில் பாரதியாரின் கற்பனையாற்றல் சிறகடித்துக் கொண்டு பறப்பதைக் காண்கின்றோம். இந்தக் குயிலின் அற்புதக் காதற் கதை,

> முன்னிக் கவிதைவெறி மூண்டே நனவழியப்
> பட்டப் பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாம்
> நெட்டைக் கனவின் நிகழ்ச்சியில்...[1]

கண்டதோர் மோகனக் கனவாகும். இந்தக் கனவின் விளைவே 'குயில்பாட்டு' என்ற அற்புதப் படைப்பு.

எத்துணை இடையூறுகள் நேரிடினும் உண்மைக் காதல் அவற்றை யெல்லாம் தொலைத்து வெற்றி பெறும் என்பதே கனவில் எழுந்த இந்தக் காதற் கதை நமக்குத் தரும் செய்தி யாகும். 'காதல் வழிதான் கரடு முரடாம் என்பர்' என்று கவிஞர் கூறும் கருத்து 'உண்மையான காதல் சுவடு எப் போதும் நேரியதாகச் செல்வதில்லை' (The course of true

1. கு. பா. 1 குயில்-அடி 22-24

love never runs smooth) என்ற ஆங்கில நாடக ஆசிரியராகிய செகப்பிரியரின் கூற்றை நினைவு படுத்துவதாக உள்ளது. ஆனாலும் காதலின் நிலைத்த வெற்றியைப்பற்றிச் சிறிதும் ஐயமுற வேண்டியதில்லை என்பதை இப்பாட்டைப் பயிலும் நாம் அறிகின்றோம்.

காதல், காதல், காதல்,
காதல் போயிற், காதல் போயிற்
சாதல், சாதல், சாதல்,

என்ற காதல் இசையின் பல்லவி நம் உள்ளத்தில் இடையீடின்றி ஒலிக்கத் தொடங்கி விடுகின்றது. இப்பாட்டில் காதலர் இருவர் ரோமியோ ஜூலியத் என்னும் இருபெரும் ஆங்கிலக் காதலர்களைப்போல் தங்கள் தீப்பேற்றின் காரணமாகத் தங்கள் பேரின்பக் காதல் வாழ்வின் தொடக்கத்திலே மரணத்தால் இணை பிரிகின்றனர். காதலன் (சேரமன்னன்) இறக்குந் தறுவாயில்,

சாவிலே துன்பமில்லை; தையலே இன்னமும்நாம்
பூமியிலே தோன்றிடுவோம்; பொன்னே நினைக்கண்டு
காமுறுவேன்; நின்னைக் கலந்தினிது வாழ்ந்திடுவேன்;
இன்னும் பிறவியுண்டு; மாதரசே, இன்பமுண்டு
நின்னுடன் வாழ்வனினி நேரும் பிறப்பினிலே[2]

கூறும் மொழிகள் காதலின் நிலைபெற்ற வெற்றியின் முரசொலியாகக் கருதலாம். அடுத்த பிறவியிலும் அந்த உண்மைக் காதலரைத் துன்புறுத்தும் பேய்களும் மாயங்களும் பலவாகும். இந்தப் பொய்ம்மைப் பிசாசுகளையும் மாயைகளையும் சிதைத்துக்கொண்டு காதல் கதிரவன் ஒளிவீசி உதயம் செய்கின்றான். இதுவே குயில்பாட்டின் உள்ளடக்கமாகும்.

---

2. ஷை: 9. குயிலின்முற்பிறப்பின்வரலாறு-அடி(163-167)

தொடக்கம்: பாட்டின் தொடக்கமே மிகவும் எடுப்பான கம்பீரத்துடனும் பேரழகுடனும் அமைந்துள்ளது.

காலை யிளம்பரிதி வீசும் கதிர்களிலே
நீலக் கடலோர் நெருப்பெதிரே சேர்மணிபோல்
மோகனமாஞ் சோதி பொருந்தி முறைதவறா
வேகத் திரைகளினால் வேதப் பொருள்பாடி
வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய
செந்தமிழ்த் தென்புதுவை[3]

என்ற கவிதைப் பகுதியில் எடுப்பான ஒருவித கம்பீரத்தைக் காண முடிகின்றது. குயில் பலவிதமான இன்னோசைகளைப் பட்டியலிட்டு எடுத்துக் காட்டும் பகுதியிலும் இந்த எடுப் பான கம்பீரத்தைக் காணலாம்.

வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி யிசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்[4]

என்ற அடிகள் மறக்க முடியாதபடி நம் மனத்தில் ஆழப் பதிந்து விடுகின்றன. தெளிவான படிமமும், இன்னோசை யும், இயக்கமும் இவற்றில் விளைவித்திருக்கும் மாயம் சொல்லுந்தரமன்று.

முடிவு: குயில் பாட்டின் முடிவும் மிகவும் அற்புதமாக அமைந்துள்ளது. குயிலைக் கவிஞர் முத்தமிடும்போது அது ஒரு சோதிப் பெண்ணாக மாறி விடுகின்றது. இந்தக் காட்சி யைக் கவிஞர்,

ஆசைக் கடலின் அமுதமடா! அற்புதத்தின்
தேசமடா! பெண்மைதான் தெய்விகமாம் காட்சியடா!
பெண்ணொருத்தி அங்குநின்றாள்; பேருவகை
கொண்டுதான்
கண்ணெடுக்கா தென்னைக் கணப்பொழுதுநோக்கினாள்

3. ஷை. 1. குயில்-அடி (1-6)
4. ஷை. 3 குயிலின் காதற் கதை-அடி (39-40)

> சற்றே தலைகுனிந்தாள், சாமீ! இவளழகை
> எற்றே தமிழில் இசைத்திடுவேன்? கண்ணிரண்டும்
> ஆளை விழுங்கும் அதிசயத்தைக் கூறுவனோ?
> மீள விழியில் மிதந்த கவிதையெலாம்
> சொல்லில் அகப்படுமோ? தூயசுடர் முத்தையொப்பாம்
> பல்லில் கனியிதழில் பாய்ந்த நிலவினையான்
> என்றும் மறத்தல் இயலுமோ? பாரின்மிசை
> நின்றதொரு மின்கொடிபோல் நேர்ந்தமணிப்
> பெண்ணரசின்
> மேனி நலத்தினையும், வெட்டினையும், கட்டினையும்
> தேனி லினியாள் திருத்த நிலையினையும்,
> மற்றவர்க்குச் சொல்ல வசமாமோ?[5] ......

என்று தன்னை மறந்த நிலையில் பேசுவர். கவித்துவத்தின் கொடுமுடியினை இதில் காண முடிகின்றது.

அளவான வருணனை: கதை காவியமாக உருவெடுக்கும்போது அக்கதையில் வரும் நிகழ்ச்சிகளில் ஒரு சுவையும் அவை மேன்மேலும் எப்படி மாறி முடிவு பெறும் என்று சிந்திப்பதில் ஏற்படத்தக்க எதிர்பார்ப்புகளும் அமைதல் வேண்டும். சில கவிஞர்களின் படைப்பில் வருணனையில் ஈடுபட்டுக் கதையை மறந்து விட்டவர் போன்ற ஒரு நிலை ஏற்பட்டு விடுகின்றது. இஃது இவ்வகைக் காவியத்திற்குச் சாதாரணமாக நேரக் கூடிய ஒரு குறையாகும். பாரதியார் இதனை நன்கு உணர்ந்தவராதலால்,

> நாசக் கதையை நடுவே நிறுத்திவிட்டுப்
> பேசுமிடைப் பொருளின் பின்னே மதிபோக்கிக்
> கற்பனையும் வர்ணனையும் காட்டிக் கதைவளர்[6]

தலின்றிக் கதையை நடத்திச் செல்லும் சிறப்பு படிப்போரின் உள்ளத்தை ஈர்த்து விடுகின்றது. இந்தப் பாட்டில் கதையின்

5. ஷை. 9. குயிலின்முற்பிறப்பின்வரலாறு-அடி (227-241)
6. ஷை. 6. இருளும் ஒளியும்-அடி (25-27)

நிகழ்ச்சிகள் ஓர் இடத்திலாவது வருணனையில் மறைய வில்லை; அன்றியும் அவை கதை எங்ஙனம் முடியுமோ என்ற ஆவல் குறையாமல் வளர்ந்து எடுத்துப் படித்த பாட்டை ஒரே மூச்சில் இறுதி வரையில் படித்து முடிக்கத் தூண்டும் பாங்கில் அமைந்துள்ளன. கதையின் இறுதியில் கவிஞனின் 'சோலை-குயில்-காதல்' கனவெல்லாம் திடீரென மறைந்து விடவே, அவர் கண் விழித்து பார்க்கும் போது,

> சூழ்ந்திருக்கும் பண்டைச் சுவடி எழுதுகோல்
> பத்திரிகைக் கூட்டம் பழம்பாய் வரிசையெல்லாம்
> ஒத்திருக்க 'நாம் வீட்டில் உள்ளோம்' என வுணர்ந்தேன்.

என்று கனவு நீக்கம் பரிதாபமாக அமைகின்றது. கவிஞரும் சிறிது மனந்தேறி தம் பகற்கனவு,

> மாலை யழகின் மயக்கத்தால் உள்ளத்தே
> தோன்றியதோர் கற்பனையின் சூழ்ச்சி

என்று கண்டு கொள்கின்றார். இங்ஙனம் கதையும் கவிஞரின் கதை கூறும் முறையும் நம்மை வியக்கச் செய்து நம் உள்ளத்தை அவற்றில் பறிகொடுக்கச் செய்து விடுகின்றது.

**தொடர்பான நிகழ்ச்சிகள்:** நிகழ்ச்சியுரைக்கும் கவிதை வகையைச் (Narrative poem) சார்ந்த குயில்பாட்டு மிக அற்புதமாய் அமைந்துள்ளது. கதைப் போக்கின் தொடர்ச்சியும் இந்த வகைக் கவிதையின் முக்கிய பண்புகளாகும். கவிதையைப் படிக்கத் தொடங்கினவர் அதனை முடிப்பதற்கு முன் கீழே வைக்க முடியாத வண்ணம் சுவை அமைய வேண்டுமானால் கதை மாந்தர்களும் நிகழ்ச்சிகளும் தெளிவாக, அடுக்கடுக்காக, ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர வேண்டும். மேலும், வருணனை, அறிவுரை பகர்தல் முதலிய நீர்த்தேக்கங்களில் தங்க விடாமல் கதை என்ற வேக

மாயோடும் வெள்ளத்தில் படிப்போரின் மனம் அடித்துச் செல்லப் பெறுதல் வேண்டும். இந்த வகை இலக்கியத்தின் மற்றொருமுக்கியமானபண்பு 'அளவு' (Scale) என்பது. அளவே கவிதைக்கு ஒரு தனி அழகைத் தரும். தனித்தனி உறுப்பு களோ, பகுதிகளோ எவ்வளவு கவர்ச்சியுள்ள அழகுவாய்ந்தன வாக இருப்பினும், "அவை யானை அளவுள்ள குதிரையும், குதிரை அளவுள்ள யானையும், பெரிகோபுரத்தைத் தாங்கும் வீடும்" என்ற முறையில் அமைந்தால் அவை கோரக் காட்சிக ளாகி விடும். நூல்களுக்கும் உயிருள்ள பிராணிகளுக்குரிய சில பண்புகள் அமைந்தால்தான் அழகு. கதைக்கேற்ற கதை மாந்தர்களும் நிகழ்ச்சிகளும் நீளமும் ஒருங்கே அமைந்து படைக்கப்பெறும் கவிதையே நல்ல நிகழ்ச்சியுரைக்கும் கவிதை யாகும். பரிமாணம் என்பது மற்றெல்லா அழகுகளையும் தன்னுள் அடக்கும் பெரிய அழகைக் குறிக்கும். இப்பேரழகில் 'குயில்பாட்டு' மிக்க கவர்ச்சியுள்ள படைப்பாகும்.

குயில்பாட்டை ஒரே மூச்சில் படித்து முடிக்கலாம். அப்படித்தான் படித்து முடிக்கவும் வேண்டும். அப்படிப் படித்து முடிப்பவர் மனத்தில் ஒரு தனிப்பட்ட ஒருபடித்தான உருவம் தோன்றுவதை அறிவர். இதை எடுத்துக்காட்டொன் றால் விளக்குவது இன்றியமையாததாகின்றது. ஒரு மனிதன் என்று கூறும்போது அந்தக் கருத்தில் அவனுடைய உறுப்பு களின் பட்டியல் இல்லை; அவனுடைய பண்புகளின் பட்டியல் இல்லை; அவனுடைய பட்டறிவுபற்றிய பட்டியலும் இல்லை. இவையெல்லாம் கடந்த ஓர் உருவம் அந்தக் கருத்தில் தோன்றுகின்றதன்றோ? இம்மாதிரியான ஒருமைப் பாட்டைச் (Unity) சுவைக்கும் பாங்கில் உணர இந்தச் சிறிய 'குயில் பாட்டு' இடங் கொடுப்பதுபோல் இக்காலத்தில் தோன்றிய தமிழ் நூல்களில் வேறொரு நூல் இடங்கொடுப் பது அரிதாகவே தோன்றுகின்றது. கவிஞர் வாக்கிலேயே

கூறினால், "மேனி நலத்தினையும். வெட்டினையும் கட்டினையும்...திருத்த நிலையினையும் ... ... சொல்ல வசமாமோ?"

நிகழ்ச்சியுரைக்கும் கவிதை வகையில் ஆங்கிலத்திலுள்ள சாசரின் 'சேவலும் நரியும்' (The Nun's Priest Tale) என்பதும் போப்பின் 'மயிர்ச் சுருக்களவு (The Rope of the Lock) என்பதும் முதன்மையாகக் கருதப்பெறுவனவாகும்; இவ்விரண்டிலும் அமைந்துள்ள அனைத்துப் பண்புகளும் 'குயில் பாட்டில்' நன்கு அமைந்துள்ளன என்று கூறுவர் ஆங்கிலப் புலவர்கள். மேலும், அவர்கள் கதையின் கவர்ச்சியிலும் நகைச் சுவையிலும், கதைமாந்தரின் பேச்சின் இயற்கை அழகிலும், மகா காவிய இலக்கணங்களைப் புரளியாய்ப் பிரயோகிப்பதிலும், புதைந்து கிடக்கும் உட்பொருள்களிலும் செய்யுள் அடிகளைப் பொருளுக்கும் பாவத்திற்கும் ஏற்ப மாற்றி மாற்றிக் கையாளும் திறமையிலும் ஆங்கிலச் சிறு காவியங்களைச் தோல்வியுறச் செய்து விடும் குயில்பாட்டு என்றும் திறனாய்ந்து கூறுவர்[7]. இதிகாசப் போலி வகையான காவியங்கள் தமிழில் அருமருந்து போன்றவை. இம்முறையைக் 'குயில்பாட்டில்' மேற்கொண்டு அச்சுவையை வெளிப்படுத்தியது பாரதியாரின் கவிதை நயத்தின் ஒரு மேன்மையான கூறு ஆகும்.

நடை: கவிதையின் நடையோட்டத்திற்கு அகவலும், கலிவெண்பாவும், எண்சீர் விருத்தமும் சிறப்பாகத் துணை செய்யும். இவற்றையெல்லாம் நன்கு அறிந்து தெளிந்தவர் பாரதியார். 714 அடிகளையுடைய குயில் பாட்டு அகவல் நடைபோன்ற ஒரு நடையைக் கொண்டுள்ளது; வெள்

7. பாரதியின் 'குயில்' (பேராசிரியர் கே. சுவாமிநாதன் எழுதியது) கலைமகள்-தொகுதி. அ. 1935-(யுவ-ஆடி-மார்கழி தொகுப்பு)-பக் 222.

ளோசை நிறைந்தது. சில இடங்களில் கலித்தளையும் தலை காட்டுகின்றது. கலித்தளை ஓரடியின் முதலிலும் கடையிலும் வருகின்றனவேயன்றி இடையில் வருவதில்லை. ஆனால் சில இடங்களில் வெண்டளை வருமாறு அமைக்கவும் முயன்றுள் ளார். குயில் பாட்டினைக் கலிவெண்பா யாப்பில் அடக்க லாம். கலிவெண்பாவில் ஒவ்வோர் இரண்டாம் அடியிலும் தனிச் சொல் அமைதல் வேண்டும். குயில் பாட்டில் இந்த முறை மேற்கொள்ளப் பெறவில்லை. பாரதியாருக்கு முன்னரே மாணிக்கவாசகர் தம்முடைய சிவபுராணத்திலும் அருணகிரியார் தம்முடைய கந்தர் கலிவெண்பாவிலும் இந்த விதியைப் புறக்கணித்து விட்டனர். கலிவெண்பாவின் இறுதியடி முச்சீரால் அமைந்து, நாள், காசு மலர், பிறப்பு என்ற நான்குசீர்களில் ஏதாவது ஒன்றால் இறுதல் வேண்டும். இந்த விதியும் இந்தப்பாட்டில் அமையவில்லை. ஆகவே, குயில் பாட்டின் யாப்பு ஆசிரியம் என்றோ கலிவெண்பா என்றோ சொல்ல முடியவில்லை. இந்த இலக்கண மரபினைப் பாரதியார் தகர்த்தெறிந்து விட்டார். இந்தப் புத்தமைப்பு முறை ஒரு மொழியில் புதிய ஒலியநயமுள்ள பாடல்களைப் அமைத்தற்கு நெகிழ்ந்து கொடுக்கின்றது. இதனால்தான் குயில் பாட்டின் நடை படிப்போரின் சிந்தையையும் சிந்தனையையும் கவர்வதாக அமைந்து விடுகின்றது.

யாப்பு முறை : குயில் பாட்டில் புதிய யாப்பு முறைகளில் பாரதியாரின் கனிந்த கவிதை படைக்கும் ஆற்றலும், பெருமித தோரணையுடன் திகழும் கற்பனையாற்றலும், உள்ளத்தைப் பறிகொடுக்கச் செய்ய வல்ல இசையின் ஆற்றலும் ஒருங்கே இணைந்து களி நடம் புரிவதைக் காண லாம். இந்த வற்றாத அமுத ஊற்றிலிருந்து பாடல் முழுதும் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுவதைப் பார்க்கலாம். மாஞ் சோலையில் கண்ட குயிலைக் கண்டு மயங்கிக் காதல் கொண் டதையும் அதன் பாட்டைக் கேட்டு தனக்கு நேர்ந்தவற்றை

யும் தன் மனம் பட்டபாட்டையும் தொடக்கம் முதல் இறுதி வரை தேனினும் இனிய செந்தமிழில் தங்கு தடையில்லாத மெல்லோசை வளத்துடன் எடுத்துக் காட்டி வருணித் திருக்கும் உயர்கவிதைப் பண்பு பாரதியின் கவிதைப் படைப்பில் சிற்சில இடங்களில்தான் தென்படுகின்றது. அவருடைய கவிதைப் படைப்புகளை ஒரு சேர வைத்து நோக்கினால் 'குயில் பாட்டும்', 'கண்ணன் பாட்டும்' 'பாஞ்சாலி சபதமும்' ஒன்றுக்கொண்டு போட்டி போட்டுக் கொண்டு தான்தான் சிறந்தது என்று அறிவிப்பதுபோல் தோன்றினாலும் சிலருக்கு இதுவே மிகச் சிறந்தது என்ற கருத்தையும் எழுப்புதல் கூடும்.

பாட்டு நுவலும் கதை விந்தையாயும், விசித்திரமாயும், இயல்புக்குப் பொருத்தமின்றியும் தோன்றினாலும் குயில் பாட்டு ஓர் அருமையான காதல் காவியம் என்பதை எல்லாத் திறனாய்வாளர்களும் ஒப்புக் கொள்ளத்தான் செய்வார்கள். அகத்துறைகளின் பெயர்கள் இதில் சொல்லப்பெறாவிடினும் துறைக் கூறுகள் ஊடும் பாவும்போல் இழையோடியிருப் பதைச் சங்க நூல்களைப் பயின்ற நினைவுடன் ஊன்றி நோக்குவார்க்குப் புலனாகாமற் போகாது. பாட்டின் எளிய, சரளமான, உயிரோட்டங் கொண்ட கவிதை நயஞ் செறிந்த அகவல் போன்ற தீந்தமிழ் நடை அதன் தனிச் சிறப்புக்குக் கைகொடுத்து உதவியுள்ளது. பத்துப் பாட்டிலும் எட்டுத் தொகை நூல்களிலும் படிப்போர் சற்று விறைப்பான— புளியங்கஞ்சி போட்ட பழங்காலத்து இருபதாம் நம்பர் ஈரிழைத் துண்டு போன்ற நெகிழ்ச்சியற்ற—நடையைக் காண் பார்கள். பேராசிரியர் சுந்தரம்பிள்ளையின் மனோன்மணீயத் தின் நடையும் இதற்குவிலக்கு இல்லை. ஆனால், குயில் பாட்டின் நடை தமிழிலக்கியம் இதத்குமுன் கண்டிராத ஓர் இனிய தெள்ளிய மெல்லோசை மிக்க நடையைக் கொண் டிலங்குகின்றது; பின்னியின் மேலாடைப் பட்டுபோலவும்,

பட்டைப்போல் பளப்பளப்பாக்கிய (Mercirised) மிக நுட்ப மான (Superfine) ஆலைவேட்டியைப் போலவும் உள்ளது' என்று சொல்லி வைக்கலாம். இது பாரதியாரின் தனிவெற்றி; பாட்டு முழுதும் ஒரே இனிமை யானவாக்கு. ஒரே கவிதை வெள்ளம், வேகமும் உயிரோட்டமும் நயமும் எங்கும்குறைய வில்லை. திருவாசகத்தின் நடையைக் குயில் பாட்டின் நடைக்கு ஒப்புக் கூறலாம். குயில் பாட்டும், திருவாசகமும் தமிழ் மொழியின் இனிமைக்கும் எல்லை காட்டுகின்றன என்று கூடச் சொல்லி வைக்கலாம். பெரியாழ்வார், ஆண்டாள் இவர்களின் பாசுரங்கள் உள்ளத்தை உருக்கும் பாங்கிலும் கவிதையின் பாவத்திலும் மேற்குறிப்பிட்ட இரண்டு நூல்களைவிட ஒருபடி தூக்காக இருக்கலாமோ என்று தோன்றலாம். ஆனால், இனிமையிலும் ஓசையின்பத் திலும் அவை ஒருபடி குறைவாகவே இருப்பதை உணரமுடி கின்றது.

சொல்வளம் முதலியவை : பாரதியாரின் சொல்வளமும் சொற்றொடர் வளமும் இப்பாட்டில் மிக அற்புமாக அமைந் துள்ளன. சாதாரண மொழிகளும், பேச்சு வழக்கு மொழி களும் தாம் சேர்ந்தவரின் புண்ணியத்தால் உயர்ந்த பலத் தைப் பெற்று இலங்குகின்றன - கன்னனை அடைந்த நாகக் கணை பலம் பெற்றது போல. தனிச் சொற்கள் சிறப்புடன் ஆளப்பெற்றிருப்பதைப் பாட்டைப் படிக்கும் போதே உணர்ந்து அநுபவிக்கலாம். கவிஞரின் கருத்திற்கேற்ப மொழி வளைந்து கொடுக்கும் அற்புதந்தைப் பாட்டெங்கும் கண்டு மகிழலாம். தனிச் சொற்களின் ஆட்சியால் மட்டிலும் சொல்வளம் நிரம்பி விடுவதில்லை. சொற்கள் ஒன்றோ டொன்று காதல் மணம் புரிந்து கலந்து வாழும் காட்சியே சொற்றொடர் வளமாகும். இதிலும் பாரதியாரின் கைவண்ணத்தைக் காணலாம்.

க சிறிய தொடர்கள்:

(எ-டு)

| | |
|---|---|
| இன்னிசைத் தீம்பாடல் | மின்னற் சுவை |
| நாதக்கனல் | கவிதை வெறி |
| மோகனப்பாட்டு | இன்பத் தீ |
| தெய்விகத்தீம்பாட்டு | தெய்வச் சினம் |
| இழிந்த புலைப்பாட்டு | கொஞ்சும் ஒலி |
| மாமாயத்தீம்பாட்டு | வளைக் கரங்கள் |
| தேன்வாரி | கூட்டமுதப் பாட்டு |
| வற்றற் குரங்கு | இன்பச் சுரம் |
| சொற்றைக் குரங்கு | மன்மதனார் விந்தை |
| புன்மைக் குரங்கு | கரை கடந்த வேட்கை |
| நேச உரை | பாயும் விழிநீர் |
| மண்டு துயர் | ஈனமுறுங் கச்சை |
| நெருப்புச் சுவைக்குரல் | பிச்சைப் பறவை |
| பொய்ப்பறவை | அமுதூரப் பாடுதல் |
| நாசக் கதை | மோன ஒளி |
| விந்தைக் குரல் | விந்தை செயும் சோதி |
| மோகப்பழங்கதை | முடை வயிறு |
| தொழுமாடு | நிசப் பிறப்பு |
| வீரத் திருவால் | பொய்ப் பாட்டு |
| பிச்சைச் சிறுக்கி | கானாமுதம் |
| தேவ சுகம் | காமஅனல் |
| ஆவிக் கலப்பின் | சோதி வெள்ளம் |
| அமுதசுகம் | இளமை முந்தும் அழகு |
| மாடன் மனம் புகைந்து | காயுஞ் சினம் |
| வேகத்திரை | விழிக் குறிப்பு |
| விருந்துத் திருநாள் | விழியில் மிதந்த கவிதை |
| உள்ளத்து அனல் | ஆசைத்தும்பி |

உ. பெரிய தொடர்கள்:

(எ-டு) 'கோற்றொடியார் 'குக்கூ'வெக் கொஞ்சும் ஒலி'

'நெஞ்சத்தே தைக்க நெடுநோக்கு நோக்கிடுவீர்'

'இன்னமுதைக் காற்றினிடை எங்கும் கலந்ததுபோல்'

'என்னைப் புதியதோர் இன்பச் சுரங்கவர'
'சோதிகடலிலே தோன்றும் கரும் புள்ளியென'
'வாரிப் பெருந்திரைபோல் வந்த மகிழ்ச்சி'
'வாலைக்குழைத்து வளைத்தடிக்கும் நேர்மை'
'நீரோடும் மேனி நெருப்போடுங்கண்'
'முத்தமிட்டு முத்தமிட்டு மோகப் பெருமயக்கில
சித்தம் மயங்கி.'

இத்தகைய அரிய இனிய செஞ்சொற்றொடர்களைக் கவிஞர் தமது இதயமாகிய நாணயச் சாலையினின்றும் ஆக்கிக் கவிதையை வளப்படுத்தியுள்ளார்.

மாறி மாறி வரும் தனது மனநிலைக் கேற்றவாறு குயிலைக் குறிப்பதற்கு மட்டிலும் பல்வேறு பெயரடைகளைப் பொருத்திக் காட்டியிருக்கும் அற்புதம் சொல்லுந்தரமன்று.

| எ-டு | கன்னிக்குயில் | நீலக்குயில் |
|---|---|---|
| | மாயக்குயில் | பேடைக் குயில் |
| | சின்னக் குயில் | குட்டிப் பிசாசக்குயில் |
| | சிறுகுயில் | செத்தைக் குயில் |
| | பிள்ளைக்குயில் | வன்னக்குயில் |
| | ஒற்றைக்குயில் | பொய்மைக் குயில் |
| | கானக்குயில் | சின்னக் கருங்குயிலி |
| | விந்தைச்சிறுகுயில் | ஆசைக்குயிலி |

இவை கவிதையில் இடத்திற்கேற்ப அற்புதமாய் அமைந்து. பாட்டிற்குப் புது மெருகூட்டுகின்றன.

பாட்டெங்கும் எளிய சிறு சொற்கள். இவை கவிதையில் அமைந்து இதற்குமுன் தமிழில் காணாத ஓர் அற்புதத்தை விளைவித்துள்ளன. கவிதை உலகில் என்றுங் காணாத புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்துள்ளன

புலவர்கள் வியப்பைக் காட்டக் கையாளும் 'அந்தோ', 'ஐயகோ', 'மாதோ' என்ற சொற்களுக்குப் பதிலாக இவர் கையாண்டுள்ள 'சாமீ' என்ற சொல்லின் அழகும் ஆற்றலும் சொல்லற்கரியனவாகும்.

காதல் உணர்வு: காதலின் பெருமையைப் பாரதியார் புகழ்ந்துகூறியதை இந்நூலில் பிறிதோரிடத்தில்காணலாம்[8]. காதலுக்கு மனிதன் அடிமையாவது போலவே மற்ற விலங்குகளும் அடிமையாகும். மனிதனின் காதலுணர்வும் விலங்குகளின் காதலுணர்வு சுரப்புநீர்களின் உந்தலால் (Hormonal drive) எழும்; ஆனால் விலங்குகளின் காதலுந்தல் நீர்சுரப்பு நின்றவுடன் அடங்கி விடும். மனிதனது காதல் உணர்வு அறிவு நிலையிலும் செயற்படுவது. இந்த உணர்வே பல அருமையான அகஇலக்கியங்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைகின்றது. காதல் இல்லாத வாழ்வு பாழ்; காதலை எழுப்பி அதனை அனல்போல் கொழுந்து விட்டு எரியச் செய்யும் ஆற்றல்களில் இசை சிறந்தது. காதலின் வளர்ச்சியில் கபட நாடகங்கள் தோன்றுவதற்கும் வாய்ப்பு உண்டு; எதிர்பாராத இடர்கள் நேர்ந்துக் காதலின் இன்பஉணர்வைத் துன்ப உணர்வாக மாற்றுவதற்கும் வாய்ப்புகள் நேரிடலாம். ஆனால், காதல் இல்லாத திருமணம் மணமும் வண்ண எழிலும் இல்லாத மலர் போன்றதாகும். காதலைக் கற்புக்கும், கற்பைக் காதலுக்கும் தியாகம் செய்யும் ஆண் பெண்களை இலக்கியத்திலும் காணலாம்; வாழ்க்கையிலும் அநுபவபூர்வமாகக் காணலாம். இவர்களில் எவர் சிறந்தவர் என்பதைஅறுதியிடஅளவுகோலேஇல்லை.இவற்றையெல்லாம் 'குயில் பாட்டு' நுவல்கின்றது என்று சொல்வதில் தவறில்லை. ஆனால், இத்தனைக்கும் மேலாகப் பாட்டின்பொருள் தெளிவாகி விட்டதா? என்பது ஒரு பெரிய கேள்விக்குறியாகவே

8. இந்நூல் இயல் பக். (24-28)

உள்ளது. சிறந்த ஆங்கிலக் கவிஞராகிய, ஷெல்லி படைத்துள்ள 'எபிசைக்கிடியான்' (Epipsychidan) என்ற அற்புதமான கவிதைச் சிறப்பு வாய்ந்த ஒரு காதல் பாட்டைப்பற்றி அதன் பொருள் தெளிவற்றிருப்பதாக ஆங்கிலத் திறனாய்வாளர்கள் அடிக்கடிச் சொல்வதுண்டு. இருந்த போதிலும் அந்தக் கவிதையை ஒருவரும் குறைவாக மதிக்கவில்லை. அதன் இசையும் கவிதையும் மிகச் சிறப்பாக அமைந்துள்ளமையே இதற்குக் காரணமாகும்.

கற்பனை : கவிதைக்கு இன்றியமையாத அணியாக இருப்பது கற்பனை. கற்பனை என்பது, புலன்கள் நேரே ஒரு பொருளை அநுபவியாத காலத்திலும் அந்தப் பொருளை நினைவிற்குக் கொண்டுவந்து அப்பொருளினிடத்து மீண்டும் அநுபவத்தை ஏற்றவல்ல ஒருவகை யாற்றல். கற்பனை என்னும் பொதுவான சொல்லில் உவமையும் பிற அணிகளும் அடங்கும். கற்பனைதான் கவிஞனின் உள்ளத்தையும், சுவைஞனின் உள்ளத்தையும் விரிவடையச் செய்து சிறிய பொருள்களின் அழகையும் பெரிய அளவில் கண்டு மகிழும்படி செய்கின்றது. சுருங்கக் கூறினால், கற்பனை கவிதையின் நுண்ணணுப் பெருக்கி (Microscope) யாக அமைந்து விடுகின்றது. பாரதியாரின் பாடல்கள் நமக்கு என்றும் பேரானந்தத்தைக் கொடுப்பதற்குக் காரணம் அவற்றில் அமைந்திருக்கும் கற்பனைக் கூறுகள்தாம். இந்தக் கூறுகளைக் கொண்டு கவிஞன் தான் காணும் உலகத்தை விட புதியதோர் உலகத்தைப் படைக்க விழைகின்றான். இந்த விழைவே அவனது அகத்தெழுச்சிக்குக் காரணமாக நின்று புதியன படைக்கும் ஆற்றலைப் பெறவும் வாய்ப்பாக அமைகின்றது.

சுனையில் சிறிதளவே நீர் உள்ளது. அதனைப் பருகச் சென்ற ஆண்மானுக்கும் பெண் மானுக்கும் அந்நீர் போதாது; ஒரு விலங்கு குடிப்பதற்கே போதாத அளவில் நீர் உள்ளது.

இதனை உணர்ந்த ஆண்மான் தான் குடிக்காமல் ஒதுங்கி நின்று பெண்மானைக் குடிக்குமாறு செய்ய எண்ணுகின்றது. பெண்மானும் அவ்வாறே ஒதுங்கி நிற்கின்றது. இதையறிந்த ஆண்மான் ஒரு தந்திரம் செய்கின்றது. பெண்மானுடன் தானும் செல்லுகின்றது இரண்டும் தண்ணீரில் வாயை வைக்கின்றன. ஆண் மானோ குடிப்பதுபோல் நடித்து நீரை உள்ளுக்கிழுத்துப் பருகாமல் உறிஞ்சி மூச்சு விட்டுக் கொண்டுள்ளது. பெண்மானின் நீர் வேட்கை தணிய வேண்டுமே என்ற தன் விருப்பத்தை இவ்வாறு நிறைவேற்றிக் கொள்ளுகின்றது தான் நீரின்றி வருந்தும் அளவிற்குத் தியாகம் செய்துவிடுகின்றது.

> சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்
> பிணைமான் இனிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்
> கள்ளத்தின் ஊச்சும் சுரம் என்ப காதலர்
> உள்ளம் படர்ந்த நெறி.[9]

என்பது மேற்கண்ட நிகழ்ச்சியை விளக்கும் கவிதை. இங்ஙனம் நடைபெறுவது இயலாததொன்று என்பதைக் கவிஞன் நன்கு அறிவான். ஆயின், அன்பின் காரணமாக ஆண்மான் பெண் மானுக்கு வேறு உதவிகளைச் செய்தலை அறிந்த அவனுடைய உள்ளம் இவ்வாறு கற்பனை அமைக்க விழைந்தது. ஓரளவு கவிதை மனப்பான்மையுள்ள நாம் அதனைப் படித்து நன்கு அநுபவிக்கின்றோம். கவிஞனுடைய அநுபவம் நம் அநுபவமாக மாறிவிடுகின்றது.

கவிஞன் கற்பனை செய்தல் பகற்கனவு (Daydream) காண்பதை யொத்தது என்பர் உளவியலார். நம்முடைய பகற்கனவின்பொழுது எண்ணங்கள் மிகக் கோவையாக எழுகின்றன; செயல்கள் எவ்வாறு நடைபெற வேண்டும் என்று

---

9. ஐந்திணை ஐம்பது—38

கற்பனை செய்து கொண்டு நம் விருப்பப்படி வானக் கோட்டைகளைக் கட்டுகின்றோம். சில சமயம் நாம் எழுதப்போகும் கற்பனைக் கதையில் நம்மையே கதைத் தலைவனாகவும் அமைத்து விடுகின்றோம். இவ்வாறு கருத்து நிலையில் செய்யப்பெறும் செயல்கள் எண்ணற்றவை. கனவு காணும் நாம் உள்ளதை உள்ளவாறு காண்பதில்லை; உள்ளம் விழையுமாறே காண்கின்றோம். நடந்த நிகழ்ச்சிகள் சிலவற்றின் அடிப்படையின் மேல் நடக்க வேண்டியவற்றைச் சேர்த்துக் காண்கின்றோம். நடக்க வேண்டியவற்றிலும் நம் உள்ளம் விரும்பும்வகையில் அமைத்துக் காண்கின்றோம். அப்பொழுது தான் மனம் அக்கனவில் நெடுநேரம் திளைத்து இருக்க முடியும்.

பாரதியாரின் குயில் பாட்டு உண்மையிலேயே ஒரு கனவு நிலையில் எழுந்த பாட்டாகும். களி வெறியில் உண்டாகும் மிகைப் பேச்சுபோல கவிதா தேவியின் அருள் தோன்றிய நேரத்தில் தன்னையும் மறந்து கொட்டிய கற்பனையாகும். ஆங்கிலத்தில் கோல ரிட்ஜ் படைத்த 'குப்லாகான்' என்ற கவிதையைப் போலவே, குயில் பாட்டும் அமைந்து விடுகின்றது என்று சொல்லலாம். குயில் பாட்டு ஒரு காட்சிதான். 'செந் தமிழ்த் தென்புதுவையென்னும் திருநகரில், மேற்கே சிறு தொலைவில் மேவுமொரு மாஞ்சோலையில் வேடர் வராத விருந்துத் திருநாளில் பேடைக்குயிலொன்று பெட்புறவோர் வான்கிளையில் வீற்றிருந்து' பாடியதைக் கவிஞர் காண்கின்றார். இது நனவுலகக் காட்சி. இதுவே கனவுலகில் கற்பனைச் சிறகுகள் பெற்று 'குயில் பாட்டாக' வடிவம் பெறுகின்றது.

கவிஞரின் உணர்வு: பாரதியார் கூர்ந்து நுணுகி நோக்கும் திறன் படைத்தவர். தாம் படைக்கும் கதை மாந்தர்கள் அல்லது நிகழ்ச்சிகளில் தம்மையே இனங் காட்டுவார். கலைஞனுக்கென்று தனிப் பண்பு ஒன்றில்லை; தான் படைக்

கும் கதைமாந்தனாகவே ஆகிவிடுவான் என்று கூறுவர் அறிஞர். ஒரு கலைஞனின் பெருமையை எடுத்துக் காட்டும் போது இந்த எதிர்மறைப் பண்பே அதிகமாக வலியுறுத்தப் பெறும்.இதனையே உளவியலார் ஒட்ட உணர்தல் (Empathy) என்று குறிப்பிடுவர் ஒட்டஉணர்தல் என்பது தன்னைப் பிற ராகவே கருதி உணர்வது. குயில் குரங்கையும் மாட்டையும் நோக்கிப் பேசும்போதும், குரங்கு சேட்டை செய்வதைக் காட்டும்போதும் கவிஞர் குயிலாகவும், குரங்காகவும் ஆய்விடு கின்றார். அந்தந்தக் கதை மாந்தராக நின்று பேசுகின்றார். குரங்குபற்றிய வருணனையும் மாடுபற்றிய வருணனையும் பாரதியாரின் கூர்ந்து நோக்கும் திறனை மெய்ப்பிப்பனவாக அமைகின்றன.

நகைச்சுவைக் கூறுகள்: குயில் பாட்டில் நகைச்சுவைக் கூறுகளும் அமைந்து பாட்டின் தரத்தைப் பன்மடங்கு உயர்த்துகின்றன. நகைச்சுவை என்பது என்ன? இயற்கைக்கு மாறாக நாம் எதையாகிலும் உணர நேர்ந்தால் அது நகைப்பை ஊட்டும். ஓர் ஆடவன் மகளிர் அணியும் ஆடையை வேட்டிபோல் அணிந்து கொண்டு சென்றால் அவனைப் பார்ப்பவர்கள் உள்ளத்தில் ஒரு வேற்றுமை தோன்றுகின்றது. அதையே நாம் நகைப்பின் மனநிலையாகக் கருதுகின்றோம். ஒருவன் புத்திக் குறைவினால் - பைத்தியத் னால் - செய்யும் செயல்களும் நகைப்பை விளைவிக் கின்றன. இவ்விதமே ஒரு மனிதனைப்போல் மற்றொரு மனிதன் பேசினாலோ நடந்தாலோ, அதிலும் நகைப்பு உண் டாவதை நாம் காண்கின்றோம். ஆயினும், இயற்கைக்கு மாறுபாடான கூறே நகைச்சுவையினைத் தூண்டுகின்றது; நகைச்சுவை உண்டாகும் நிலைகளையெல்லாம் சோதித்துப் பார்த்தால் இயற்கைக்குப் புறம்பான கூறு அங்கு விளங்கும் என்ற உண்மையினைத் தெளியலாம்.

நகைப்பு சிருங்காரத்திலிருந்து பிறந்ததாகப் பரத முனிவர் கூறுவார். உவகை தகுதியற்ற இடத்தில் இருந்து விட்டால் அது நகைப்பிற்கு ஏதுவாகின்றது. காதல் என்பது ஆண்-பெண் என்ற இரண்டு பேர்கட்கும் பொதுவானது. அஃது ஒருவரோடு மட்டும் நின்றால் நகைப்பினை ஊட்டா மல் எப்படி இருக்க முடியும்? சீதாப்பிராட்டியை இராவணன் அசோக வனத்தில் வைத்துத் துன்புறுத்தினான்; தேவி அவனைத் திரும்பியும் பார்க்கவில்லை. புல்லினும் அற்பனாக நினைத்து அவனைப் புறக்கணித்தாள். இந்நிலையில் ஆசையை ஊட்டும் அவனது காதல் மொழிகள் பரிகாசத் தையே விளைவித்தன; நிகழ்ச்சியைப் படிக்கும் நம்மால் நகைக்காமல் இருக்க முடியவில்லை. ஆயினும், இருக்கவேண் டிய நிலை தவறியிருக்குமானால் எதிலிருந்தும் நகைச்சுவை விளையக்கூடும் என்றிருக்கும்பொழுது சிருங்காரம் அல்லது உவகையிலிருந்தோ ஹாஸ்யம் அல்லது நகைச்சுவை விளை கின்றது என்று கூறிய பரதமுனிவரின் உள்ளத்தில் ஏதோ ஆழ்ந்த கருத்து இருக்க வேண்டும்.

'குயில்பாட்டு' க்கு வருவோம். குரங்கினிடமும் மாட்டி னிடமும் குயில் பேசும் காதல் மொழிகளிலும், குரங்கின் சேட்டைகளிலும், நகைப்புக் கூறுகளை அநுபவித்து மகிழ லாம். குயில் பேசுகின்றது.

—வானரரே!

ஈடறியா மேன்மையழ கேய்ந்தவரே! பெண்மைதான்
எப்பிறப்புக் கொண்டாலும், ஏந்தலே! நின்னழகைத்
தப்புமோ? மையல் தடுக்கும் தரமாமோ?
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
மேனியழகினிலும் விண்டுரைக்கும் வார்த்தையிலும்
கூனி யிருக்கும் கொலுநேர்த்தி தன்னிலுமே,

வானரர்தஞ் சாதிக்கு மாந்தர்நிகர் ஆவரோ?
ஆன வரையும் அவர்முயன்று பார்த்தாலும்
பட்டுமயிர் மூடப் படாத தமதுடலை
எட்டுடையால் மூடி எதிருமக்கு வந்தாலும்
மீசையையும் தாடியையும் விந்தைசெய்து வானரர்தம்
ஆசை முகத்தினைப்போ லாக்க முயன்றிடினும்
ஆடிக் குதிக்கும் அழகிலுமை நேர்வதற்கே
கூடிக் குடித்துக் குதித்தாலும், கோபுரத்தில்
ஏறத் தெரியாமல் ஏணி வைத்துச் சென்றாலும்,
வேறெத்தைச் செய்தாலும் வேகமுறப் பாய்வதிலே
வானரர்போ லாவரோ? வாலுக்குப் போவதெங்கே?
ஈனமுறுங் கச்சை இதற்கு நிகராமோ?
பாகையிலே வாலிருக்கப் பார்த்ததுண்டு, கந்தைபோல்
வேகமுறத் தாவுகையில் வீசி எழுவதற்கே
தெய்வங் கொடுத்த திருவாலைப் போலாமோ?
சைவ சுத்த போசனமும் சாதுரியப் பார்வைகளும்
வானரர்போற்சாதியொன்றுமண்ணுலகின்மீதுளதோ?[10]

என்று குயில் வானரத்திடம் பேசும் பேச்சிலும், மனிதனைக் காட்டிலும் குரங்கின் பெருமையை உயர்த்திக் கூறும் போக்கிலும் நகைச்சுவை கொப்புளித்தெழுவதைக் காணலாம். அதன்பிறகு ''நீசக் குயிலும் நெருப்புச் சுவைக் குரலில், ஆசை ததும்பி அமுதூறப்'' பாடுகின்றது.

குயில் பாடிய இன்னிசைப் பாட்டில் மனத்தைப் பறிகொடுத்த குரங்கு செய்யும் சேட்டைகள்:

வற்றற் குரங்கு மதிமயங்கிக் கள்ளினிலே
முற்றும் வெறிபோல் முழுவெறிகொண் டாங்ஙனே
தாவிக் குதிப்பதுவும் தாளங்கள் போடுவதும்
''ஆவி யுருகுதடி, ஆஹாஹா'' என்பதுவும்
கண்ணைச் சிமிட்டுவதும், காலாலும் கையாலும்
மண்ணைப் பிறாண்டியெங்கும் வாரியிரைப்பதுவும்

10. கு பா:5. குயிலும் குரங்கும் - அடி (21-47)

"ஆசைக் குயிலே! அரும்பொருளே! தெய்வமே!
பேச முடியாப் பெருங்காதல் கொண்டுவிட்டேன்,
காதலில்லை யானாற் கணத்திலே சாதலென்றாய்!
காதலினாற் சாகுங் கதியினிலே தன்னைவைத்தாய்
எப்பொழுதும் நின்னை இனிப்பிரிவ தாற்றுகிலேன்
இப்பொழுதே நின்னை முத்தமிட்டுக் களியுறுவேன்"[11]

என்று பல பேசித் தன் ஏக்கத்தைப் புலப்படுத்துவதிலும் நகைச்சுவை ததும்பி வழிகின்றது.

வயிறாரப் புல்லை மேய்ந்து மேய்ந்த புல்லை அசைபோடு வதைத் தவிர வேறொன்றும் அறியாமல் பொதிபோல் பருத்துக் குயிலின் காதல் மொழிக்கு யாதொரு மறு மொழியும் சொல்வதற்கு அறிவில்லாத கிழ எருதைக் குயில் நேசித்து அதனிடம் தன் ஆசை மொழிகளைப் புகல்வதைக் கேட்கும் போது நாம் வாய்விட்டுச் சிரிக்கின்றோம். குயிலின் காதல் பேச்சு:

"நந்தியே,
பெண்டிர் மனத்தைப் பிடித்திழுக்கும் காந்தமே!
காமனே! மாடாகக் காட்சிதரும்! மூர்த்தியே!
பூமியிலே மாடுபோற் பொற்புடைய சாதியுண்டோ?
மானுடருந் தம்முள் வலிமிகுந்த மைந்தர்தமை
மேனியுறுங் காளையென்று மேம்பா டுறப்புகழ்வார்
காளையர்தம் முள்ளே கனமிகுந்தீர் ஆரியரே!
நீள முகமும் நிமிர்ந்திருக்கும் கொம்புகளும்,
பஞ்சுப் பொதிபோல் படர்ந்த திருவடிவும்
மிஞ்சுப் புறச்சுமையும், வீரத் திருவாலும்,
வானத் திடிபோல் 'மா'வென் றுறுமுவதும்,
ஈனப் பறவை முதுகின்மிசை ஏறிவிட்டால்
வாலைக் குழைத்து வளைத்தடிக்கும் நேர்மையும், பல்
காலம்நான் கண்டு கடுமோக மெய்திவிட்டேன்"[12]

என்று எருதின் எழிலுக்குக் கவிபாடித் தன்னை அடியாளாக ஏற்றுக்கொள்ள வேண்டுகின்றது; தனக்கு அந்தப் பேறு

---

11. ஷை. ஷை. அடி(59-70)
12. ஷை. குயிலும் மாடும்-அடி(15-28)

கிடைத்தால் தான் தன் அன்பைக் காண்பிக்கும் விதத்தையும் எடுத்துரைக்கின்றது. மனிதருக்கு உதவிசெய்து களைத்துப் படுத்திருக்கும்பொழுது, தான் அதன் காதில் மதுர இசைபாடு வதாகக் கூறுகின்றது. பின்னர்,

> வந்து முதுகில் ஒதுங்கிப் படுத்திருப்பேன்,
> வாலி லடிபட்டு மனமுகிழ்வேன், 'மா'வென்றே
> ஒளியிடுநும் பேரொலியோ டொன்றுபடக் கத்துவேன்,
> கானிடையே சுற்றிக் கழனியெலாம் மேய்ந்து, நீர்
> மிக்கவுண வுண்டுவாய் மென்றசைதான் போடுகையில்
> பக்கத்திருந்து பல கதைகள் சொல்லிடுவேன்
> காளை யெருதரே, காட்டிலுயர் வீரரே,
> தாளைச் சரணடைந்தேன் தையலெனைக் காத்தருள்வீர்
> காதலுற்று வாடுகின்றேன்''

என்று 'பொன்போற் குரலும் புதுமின்போல் வார்த்தைகளும் கொண்டு' பேசுகின்றது. எருதின் அழகு வருணனையும் குயி லின் தொண்டும் நம்பால் நகைச் சுவையை எழுப்புகின்றதல் லவா? ஈண்டு எடுத்துக் காட்டின குரங்கின் பெருமையையும், மாட்டின் மகிமையையும் பற்றிய குயிலின் புகழ்ச்சியுரையில், உண்மையான காதலென்று வெளிப்படையாகக் காண்கின்ற விடங்களில், நகைச்சுவை உள்ளிருந்து உவப்பை உண்டாக்கு கின்றதென்பதைச் சொல்லவேண்டா. இந்த உரையில் எதிர் மறை இலக்கணை என்று சொல்லத்தக்க ஒரு காவியப் பண்பு ஒளிர்கின்றது.மேலாகத் தோன்றும் பொருளுக்கு நேர்விரோத மான பொருள் உள்ளடங்கி நகைச்சுவையை வளர்க்கின்றது.

இன்னும் ஓரிடத்தில் நகைச் சுவை தட்டுப்படுகின்றது. முனிவர் குயிலின் முற்பிறப்பின் வரலாற்றைக் கூறிக் கொண் டிருக்கும்போது—''சந்திஜெபம் செய்யும் சமயமாய்விட்டது'' என்று கூறித் திடீரென்று கதையை நிறுத்துவது நகைச் சுவையைவிட உயர்ந்த சுவை கொண்டிருப்பதாகக் கருத

இடம் உண்டு. ''எந்தப் பட்டணம் எப்படிக் கொள்ளை போனாலும் சரி, எந்த ஏழை மனம் எப்படிப் பரிதபித்தாலும் சரி, என் அநுட்டானத்துக்குப் பங்கம் வராமல் என் ஆன்மாவை நான் பாதுகாப்பேன்'' என்று கூறும் பரம சுயநலவாதிகட்கு இது சவுக்கடி தருவதாகும். நகைச் சுவையுடன் எள்ளலும் கலந்து நம்மை இன்புறுத்துவதை இதில் கண்டு மகிழலாம்.

பாரதியாரின் 'குயில் பாட்டு' இன்னிசை கொட்டும் கவிதையின்பம் செறிந்த தமிழ் நூல்களில் சிறந்ததொரு கற்பனைப் படைப்பு; கலை மெருகிட்ட ஓர் அற்புதச் சொல்லோவியம். எளிய பதங்களும் படிப்போர் மனம் கவரத்தக்க நல்ல சந்தநயக் கொழிப்பும் அடங்கியுள்ளமையால் அதிகப் புலமையில்லாத தமிழர்களும் பொருள் தெரிந்து மனமுருகிப் பாட்டை அநுபவிக்கலாம். தமிழ் இலக்கிய மறுமலர்ச்சியின் அற்புதச் சொல்லோவியமாகத் திகழ்வதையும் கண்டு மகிழலாம். இந்தச் சிறந்த கவிதைப் படைப்பினால்,

> பண்டிதர்கள்
> கடத்திச் சென்ற
> பைந்தமிழ்க் குழந்தையைக்
> கண்டு பிடித்துக்
> கொண்டு வந்த
> காவல் நிலையம்![13]

என்ற புதுக் கவிஞரின் கருத்தும் ஒருவாறு தெளிவாகின்றது. கவிதை நெறியில் புது மரபினை அமைக்கவேண்டும் என்ற பாரதியாரின் பேரவாவையும் காணமுடிகின்றது. கவிஞர் அந்த முயற்சியில் வெற்றியையும் அடைந்துவிட்டார் என்ற உண்மையையும் தெளிவாக உணர முடிகின்றது.

---

13. கவிஞர் வாலி—பாரதி ஒரு பிள்ளையார் சுழி (கல்கி-விடுமுறைச் சிறப்பு மலர்—1981)

## பயன்பட்ட நூல்கள்

## (அ) தமிழ் நூல்கள்


1. இராசகோபாலன் கு. ப. சுந்தரராசன் பெ. கோ: கண்ணன் என் கவி (பூங்கொடிப் பதிப்பகம் மயிலாப்பூர், சென்னை—600004 (ஜூலை-1981)
2. இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா (இராமலிங்கர் பணி மன்றம், சென்னை—86)
3. கழக வெளியீடு : முருகன் புகழ் மாலை-(1924)
4. சுப்பிரமணிய அய்யர் ஏ. வி: தற்காலத் தமிழ் இலக்கியம் (1942)
5. சுப்பிரமணிய பாரதியர் கவிதைகள் (எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை வெளியீடு—1962)
6. சுப்பிரமணிய பாரதியார் கவிதைகள் (வானவில் பிரசுரம், சென்னை—36)—1980
7. சுப்புரெட்டியார் ந. கவிதையனுபவம் (கழக வெளியீடு, 1961)
8. தேசிகவிநாயகம் பிள்ளை, சி. : மலரும் மாலையும் (புதுமைப் பதிப்பக வெளியீடு—1944)
9. பத்மநாபன், ரா. அ. : பாரதியார் கவிநயம் கட்டுரைத் (தொகுப்பு)வானதி பதிப்பகம், தி.நகர் சென்னை-17
10. பாரதியார் பல்கலைக் கழகம். பாரதியின் புலமை ஒளி (15 கட்டுரைத் தொகுப்பு)-1982
11. மாணிக்கவாசகர்: திருவாசகம் (தருமையாதீன வெளியீடு—1949


## ஆங்கில நூல்


12. Meenakshisundaram, K : *A Study of the Poetical Works of Subramauiya Bharathi* (Paari Nilayam Madras-1) 1965

# பொருட்குறிப்பு அகராதி

## பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியாரின் நூல்கள்

ஆசிரியம் :

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல்
5. யுனெஸ்கோ : அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

இலக்கியம் :

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்
12. அறிவியல் தமிழ்
13. வேமனர்
14 சி ஆர். ரெட்டி
15. திருக்குறள் கருத்தரங்கு மலர்-1974 (பதிப்பு)
16. கம்பனில் மக்கள் குரல்
17. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
18. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
19. மேகானி
20. குரஜாட

சமயம், தத்துவம் :

21. மலைநாட்டுத் திருப்பதிகள்
22. தொண்டை நாட்டுத் திருப்பதிகள்
23. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்
24. வடநாட்டுத் திருப்பதிசள்
25. சோழ நாட்டுத் திருப்பதிகள்—முதல் பகுதி
26. சோழ நாட்டுத் திருப்பதிகள்-இரண்டாம் பகுதி
27. முத்தி நெறி
28. சில நோக்கில் நாலாயிரம்
29. வைணவமும் தமிழும்

திறனாய்வு :

30. கவிதையநுபவம்
31. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
32. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
33. அகத்திணைக் கொள்கைகள்
34. புதுக்கவிதை போக்கும் நோக்கும்
35. கண்ணன் பாட்டுத்திறன்
36. பாஞ்சாலி சபதம்-ஒருநோக்கு
37. பாரதீயம்
38. குயில்பாட்டு-ஒருமதிப்பீடு

அறிவியல் :

39. மானிட உடல்
40. அணுவின் ஆக்கம்
41. இளைஞர் வானொலி
42. இளைஞர் தொலைக்காட்சி
43. அதிசய மின்னணு
44. நமது உடல்
45. இராக்கெட்டுகள்
46. அம்புலிப் பயணம்

47. தொலை உலகச் செலவு
48. அணுக்கரு பௌதிகம்
49. இல்லற நெறி
50. வாழையடி வாழை
51. அறிவியல் விருந்து
52. வானமண்டலக் காட்சி

ஆராய்ச்சி :

53. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி
54. *Relgion and Philosophy of Nalayira Divya Prabandham with Special Reference to Nammalvar.*
55. *Studies in Arts and Sciences* (61st Birth Day Commemoration Volume)
56. *Collecd Papers* of Prof. N. Subbu Reddiar

குறிப்பு : இவற்றைத் தவிர ஆங்கிலத்தில் ஐம்பதிற்கு மேற்பட்ட தமிழாய்வுக் கட்டுரைகளும், தமிழில் நாற்பதிற்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளும், முந்நூறுக்கு மேற்பட்ட பொதுக் கட்டுரைகளும் எழுதியுள்ளமை; அன்றியும் முதல் ஐந்து வகுப்புகட்குப் பாடநூல்கள் எழுதினமை; 8 முதல் 12 வகுப்புகட்குரிய உரைநடைப் பகுதிகட்குப் பல்வேறு துறை களில் குறிப்பாக அறிவியல் துறைகளில் கட்டுரைகள் வழங் கினமை.

## இந்நூலாசிரியரைப்பற்றி...



65 அகவை நிரம்பிய இந்நூலாசிரியர் பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார், பிஎஸ். சி., எல். டி, வித்துவான், பி. ஏ, எம் ஏ., பிஎச்டி பட்டங்கள் பெற்றவர்' ஒன்பதாண்டுகள் துறையூர் ஜமீந்தார் உயர் நிலைப் பள்ளியில் முதல் தலைமை யாசிரியராகவும் (1941 50), காரைக்குடி அழகப்பா ஆசிரிய பயிற்சிக் கல்லூரி முதல் தமிழ்ப் பேராசிரியராகவும் (1950-60), பதினேழு ஆண்டுகள் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் முதல் தமிழ்த் துறைத் தலைவராகவும் பேராசிரியராகவும் (1960 77) பணியாற்றி ஓய்வு பெற்றவர். ஓய்வு பெற்றபின் பதினைந்து மாதங்கள் (1978 பிப்ரவரி முதல் 1979 ஜூன் முடிய) கலைக் களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராகவும் பணியாற்றியவர். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் நம்மாழ்வாரின் தத்துவத்தை ஆய்ந்து டாக்டர் (பிஎச்.டி) பட்டம் பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதி வெளியிட்டவர். தவிர, ஆசிரியம் (5), இலக்கியம் (16) சமயம், தத்துவம் (8), திறனாய்வு (9), அறிவியல் (14) ஆராய்ச்சி (4) என்று 56 அரிய நூல்களின் ஆசிரியர். பாரதி நூற்றாண்டில் அவர் பற்றி நான்கு ஆய்வு நூல்களை வெளியிட்டவர். அண்மையில் வெளிவர இருக்கும் நூல்கள் புதுக்கவிதை : போக்கும் நோக்கும், முத்திநெறி என்பன. இனிமை எளிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச் சிறப்புகளாகும்.




**First Paper:** *என்ன ஆச்சரியம்?* **"Enna Aacharyam !" [1949]**

# ஓர் அறிமுகம்

**பேராசிரியர்**

# ந சுப்பு ரெட்டியார்



Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

**1) Tamil Payitrum Murai [1957]**
**2) Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
**3) Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
**4) Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21

b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

### *Research on Professor's Books*

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)



பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]

**India Book of Records**

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**

**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*
*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*

ISBN 978-81-939317-4-5

